4th November 1958]

Of course " the scheme for rehabilitation of degraded forests and afforestation of low hills " has been completed during 1956–57 itself and the plantations raised are being maintained. The other schemes are under various stages of implementation. A statement [a] showing the targets achieved so far and those proposed for 1958–59 is laid on the table of the house.

**Sri S. Lazar** : தேக்கு மரம் நடுவது சம்பந்தமாக ஆற்று அல்லது வாய்க்கால் கரைகளில் உற்பத்தி செய்ய இரண்டாவது ஐந்தாண்டு திட்டப்படி துரிதப்படுத்த நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**The Hon. Sri M. Bhaktavatsalam** : இது புதிய திட்டம். முதலில் கொஞ்சம் தாமதம் ஏற்படுகிறது. இதைத் திட்டப்படி முடிப்பதற்கு வேண்டிய கவனம் செலுத்தப்படுகிறது..

*Cashew cultivation*

* 838 *Q*.—**Sri A. Vedarathnam** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா கடற்கரையோரப் பகுதிகளில் முந்திரி சாகுபடிக்கு ஏதேனும் திட்டமுண்டா ? அப்படியானால் அதன் விபரம் என்ன ?

**The Hon. Sri M. Bhaktavatsalam** : The answer is in the negative.

**Sri V. K. Ramaswamy Mudaliyar** : Sir, inasmuch as there has been a large scale increase in cashew cultivation, especially under the Forest Department, is there any proposal with the Government to start a cashew factory in the near future as we have not got such a factory in this State?

**The Hon. Sri M. Bhaktavatsalam** : Government have no such proposal. But there are a few factories. For example in the Kadambuliyur Firka of South Arcot district, a cashew factory was started three or four years ago.

**Sri A. Vedarathnam** : தஞ்சை ஜில்லாவில் கடற்கரைப் பகுதியில் ஏராளமாக முந்திரி சாகுபடி செய்ய வசதி இருந்தும் அந்தச் சாகுபடி விருத்தி செய்யப்படவில்லை. சிறப்பாக கோடிக்கரைக் காட்டில் நிறைய முந்திரி பயிரிடுவதற்கு வசதி இருக்கிறது. ஆகவே அங்கே பயிரிடுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**The Hon. Sri M. Bhaktavatsalam** : அரசாங்கம் நேரிடையாகப் பயிரிடுவதைவிட தனி நபர்கள் பயிரிட முன்வந்தால் அவர்களுக்கு உதவி அளிப்பதுதான் இந்த அரசாங்கத்தின் நோக்கம். அங்கே ஐயாயிரம் எக்கரா முந்திரி பயிரிடப்படலாம் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. எக்கர் ஒன்றுக்கு 60 ரூபாய் கடன் கொடுத்து உதவவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

**Sri S. Ramalinga Padayachi** : உடையார்பாளையம் தாலுகாவில் முந்திரிப் பயிருக்கு ஏற்ற நிலத்தின் " சாயில் " ஒத்திருக்கிறது. அங்கே இருக்கும் காடுகளை எடுத்து அங்கே முந்திரிகளைப் பயிரிட அரசாங்கம் முயற்சிக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. Bhaktavatsalam** : அதைப் பற்றித் தனியாகக் கேள்வி கேட்டால் பதில் சொல்லுகிறேன். அங்கே என்ன பயிரிடலாம் என்பதை பற்றி இப்பொழுது என்னிடம் தகவல் இல்லை.

**Sri S. Ramakrishna Thevar** : இந்த முந்திரி விவசாயம் செய்வது எங்கள் பகுதியில் அவ்வளவு பழக்கம் இல்லை. என் தொகுதியில் நீண்ட கடற்கரைப் பிரதேசம் இருக்கிறது. திருவாடானை முதல்

---

[a] Printed as Appendix VI on page 587 infra.

சுந்தரப்பட்டணம் வரை 35 மைல்கள் கடற்கரைக் காடு இருக்கிறது. அங்கே கொஞ்ச இடத்தை பரிசீலனை செய்து முந்திரி பயிரிட முடியுமா என்று யோசனை செய்து காட்டினால் அதைத் பின்பற்றி தனிப்பட்டவர்கள் சாகுபடி செய்ய முன் வருவதற்கு அரசாங்கம் வழிவகை செய்யுமா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எங்கெங்கே தகுதி இருக்கிறதோ அங்கெல்லாம் முந்திரிப் பயிர் சாகுபடி செய்யப் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. முந்திரிப் பயிர் செய்வதற்கு லாயக்கற்ற இடங் களில் வேறு என்ன பயிர் செய்யலாம் என்றும் ஆலோசனை செய்யப்பட்டு வருகிறது.

SRI A. VEDARATHNAM : சர்க்காருடைய ரிசர்வ் பாரஸ்டுகளில் தனியார் முந்திரி சாகுபடி செய்ய வர முடியாது. அதைச் சர்க் காரே எடுத்துக்கொண்டுதான் செய்ய வேண்டும். கோடிக்கரைக் காடுகள் சர்க்காரைச் சேர்ந்தவையாதலால் அங்கே சர்க்காரே முந்திரிச் சாகுபடி செய்வதற்கு முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றித் தான் முன்பு பதிலளித்தேன். காட்டிலாகாவைச் சேர்ந்த பகுதிகளில் எங்கெங்கே எந்தெந்தப் பயிர் வைப்பதற்கு தகுதி இருக்கிறதோ அங்கங்கே அந்தந்தப் பயிர் சாகுபடி செய்வதற்கு கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI A. GOVINDASAMY : காலியாக இருக்கிற இடங்களில் எல்லாம் முந்திரிப் பயிர் நடுகிறார்களா ? அல்லது காலியாக உள்ள இடங்களில் முந்திரிப் பயிர் செய்வதற்கு ஏற்ற சாயில் இருக்கிறதா என்பது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு முன்னால் சொன்ன பதில்களை எல்லாம் அங்கத்தினர் அவர்கள் கவனித்து இருப் பார்கள். மற்ற அங்கத்தினர்கள் இந்த காட்டில் பயிரிடலாம் அந்தக் காட்டில் பயிரிடலாம் என்று சொன்னபோதுகூட இந்தத் திட்டம் பரிசீலனை செய்யப்பட்டு முந்திரிப் பயிர் வைக்கப்படுகிறது என்று சொன் னேன்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : தஞ்சை ஜில்லாவில் ஆற்றோரங்களில் முந்திரி சாகுபடிக்கான சிறந்த வண்டல் மண் நிறைந்து இருக்கிறபடியால் அங்கு முந்திரி சாகுபடிக்குத் தனிப்பட்ட வர்கள் முன்வந்தால் அரசாங்கம் உதவி அளிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முன்பே சொன்னேன், ஏக்கர் ஒன்றுக்கு 80 ரூபாய் கடன் உதவி அளிக்கப்படும் என்று. சர்க்கார் வசத்தில் இருக்கும் ஆற்றோரப் பகுதிகளில் எல்லாம் தேக்கு பயிரிடப்பட்டுவருகிறது.

### *Scholarships to Backward Class Students*

* 839 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether it is a fact that students belonging to the Backard Classes were not permitted to renew their applications for scholarships as a result of which they did not get their scholarships renewed by the Central Government for the year 1957–58?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.